

# திருக்குறள்

**இறந்தார் இறந்தார் அனையர் சினத்தைத்**
**துறந்தார் துறந்தார் துணை** (வாய்மை 310)

சினத்தின் எல்லை கடந்தவர் சாவை அடைந்தவருக்குச் சமம். சினத்தை விலக்கியவரோ அனைத்தையும் விலக்கிய துறவியருக்கு இணை ஆவார். *உரை:* **கவிஞர் சிற்பி**

## ஆசிரியர் பக்கம்

### ஓர் ஆளுமையின் பிரிவு

அக்டோபர் மாதம் பலபேர் பிறந்திருப்பார்கள் - காந்திஜி, லால்பகதூர் சாஸ்திரி, சிவாஜிகணேசன் போல. பலபேர் பிறந்திருப்பார்கள். கர்மவீரர் காமராஜர் போல. அவர்களது நினைவுகள் தொடர்ந்து படக்காட்சியாகத் தோன்றும். அப்படித்தான் உணவுத்துறை அறிஞர் டாக்டர் எம்.எஸ். சுவாமிநாதன் மறைவுச்செய்தி ஆரோவில் மையத்திற்குவந்து பரவியதும் பலவேறு எண்ணவோட்டங்கள் எழுந்தன. அவர் ஆரோவில் நிறுவனத் தலைவராக சிலகாலம் இயங்கியுள்ளதால் ஆரோவிலியர் நாங்கள் நினைவேந்தல் செய்தோம். அஞ்சலிச் செய்திகளைப் பகிர்ந்து கொண்டோம். இங்கு அவரது சிரித்த முகம் பிரசித்தம்.!

இது ஆரோவில் தளத்தில் நான் பங்குகொண்ட ஒரு குறுந்தட்டு அனுபவம். சிறுதுளி. ஆனால் அதற்கும் மேலே சொல்வதற்கு எனக்குள் ஏராளமான தகவல் தொடர்புகள் இழைநூலாய் நீள்கின்றன.

கோவையில் நான் மனையியல் பட்டம் பெற, கல்லூரி விடுதியில் தங்கி பாதிப்படிப்பும் கால்நடிப்பும், கால்துடிப்புமாக மாண்புமிகுந்தவர்களுடன் மாணாக்கியாக வளர்ந்துகொண்டிருந்த காலையில் எங்களுக்கு மாபெரும் ஆளுமைகள் அறிமுகமானார்கள் டாக்டர் இராஜம்மாள் தேவதாஸ், இந்தியாவின் தலைசிறந்த குடும்பப் பொருளாதார அறிஞர். அவரோடு இணைந்து இந்தியாவின் சத்துணவுத் திட்டங்களுக்கு உருக்கொடுத்தவர் பேராசிரியர் எம்.எஸ்.சுவாமிநாதன். உணவியல் வகுப்பில் எங்களுக்குத் தரப்பட்ட ஒரு கையேடு - எந்தெந்த உணவுப்பொருளில் என்னென்ன உயிர்ச்சத்துக்கள் உள்ளன என்று துல்லியமாக அட்டவணையிட்டு ஆங்கிலத்தில் அமைந்திருக்கும்.

நான் எனது அறிவுமொழிக்காக புரோட்டீன் - புரதம், ஃபேட் - கொழுப்பு என்று எழுதிவைத்துக்கொள்வேன் அந்த நூலைத் தேர்வுக்குப் படிப்பது போலப் படித்து செய்முறைப் பயிற்சியில் விடைகண்டு எழுதும்போது ஒப்பிட்டுப் பார்க்கவேண்டும். ஒரு பாடநூலாசிரியரே



## அன்னையின் பிரார்த்தனை

எம்பெருமானே, நின்பாலுள்ள எனது ஆர்வம் அளவான இதழ்கள் இசையுடன் பொருந்திய, முழு மலர்ச்சி அடைந்த நறுமணம் கமழ்கின்ற அழகிய ரோஜா மலரின் வடிவம் எடுத்துள்ளது. எனது இரு கைகளாலும் அதை உனக்குச் சமர்ப்பித்து நின்னை நோக்கி இவ்வாறு கேட்கிறேன்: எனது புத்தி குறுகிய வரம்புகள் உடையதாக இருந்தால் அதை ஒளியுறுத்து; எனது இதயத்தில் தீவிரம் இல்லையென்றால் அதில் நெருப்பை மூட்டு, எனது அன்பு அற்பமாக இருந்தால் அதைக் கனலேறும்படி செய்; எனது உணர்ச்சிகள் அறிவற்றவையாகவும் அகங்காரம் நிரம்பியதாகவும், இருந்தால் அவற்றிற்கு உண்மையின் முழு உணர்வை அளி, இதை உன்னிடம் கோரும் “நான்” இறைவா, ஆயிரக்கணக்கான ஆளுமைகளுள் ஒரு சிறு ஆளுமை அன்று; முழுப்புவியும் மிகுந்த ஆர்வத்துடன் நின்னை நோக்கி ஆர்வமுறுவதாகும்.

எனது தியானத்தின் பூரணமான மோனத்தில் எல்லாம் எல்லையற்றதாக விரிகின்றது. அந்த மோனத்தின் பூரணமான அமைதியில் நீ நினது ஒளியின் மகிமைப் பிரபாவத்தில் தோன்றுகிறாய்.

ஸ்ரீஅன்னை,

நேரில் வந்தால் மாணாக்கியருக்கு எத்தனை மகிழ்ச்சியாயிருக்கும்? அதை நான் என் பதின்ம வயதில் அனுபவித்திருக்கிறேன். அந்தக் காலக்கட்டத்தில் சத்துக்குறைபாட்டினால் தாய்மார்களும், குழந்தைகளும் மரணிக்கும் அவலநிலைபற்றி அறிந்துகொண்டோம் அவற்றைத் தவிர்க்க நம் உள்ளூரிலேயே கிடைக்கும் முருங்கை, கேழ்வரகு, வெல்லம், கைக்குத்தல் அரிசி, பப்பாளிப்பழம், பொட்டுக்கடலை இவற்றைப் பயன்படுத்தி னாலே ஊட்டச்சத்துகள் பெறலாம் என்பது பற்றியும் அறிந்து கொள்ள எம்.எஸ் சுவாமிநாதன் உறுதுணையானார். அன்று நாங்கள் பெற்ற வாழ்வியல் கல்வி இன்றுவரை உடலோடு, உணர்வோடு உயிரோடு துணையாக வருகிறது என்பது மெய். எனக்காக மட்டுமல்ல பலருக்கும் எடுத்துரைக்க எனக்கொரு அடிப்படைத்தளம் அமைத்துக்கொடுத்த பேராசான்களுள் எம்.எஸ். சுவாமிநாதனும் ஒருவர். அவருக்கு நன்றி கூறுகிறது. நெடிது வந்துகொண்டிருக்கிற வாழ்க்கைப் பாதை.



மற்றொரு இனிப்பான தகவலையும் அந்நினைவினூடாகப் பதிவிட நேரிடுகிறது. சுமார் 27 ஆண்டுகளுக்குமுன் சென்னையில் ராஜா அண்ணாமலைபுரத்தில் ஓர் அடுக்கக வளாகத்தில் எங்கள் தாயார் வசித்து வந்தார். அதேபகுதியில் மதுரம் என்பவரும் வசித்துவந்தார். வயது 90 இருக்கலாம் சிறப்பு என்னவென்றால் நமது தாயாரின் பெயரும் மதுரம். அஞ்சல்காரர் அடிக்கடி கடுதாசிகளை மாற்றிப் போட்டுவிடுவாராம் அப்படியொருமுறை எம் அன்னை மதுரம் கொடுத்த அஞ்சல் உறையை எடுத்துக்கொண்டு திருமதி மதுரம் பூதலிங்கம் அம்மையைத் தேடிச்சென்றேன். கதவுமணி ஒலித்தபின் சிறிது நேரம் கழித்துவந்து கதவைத் திறந்தார் மூத்த அழகிய அம்மா முறுவலித்துக்கொண்டோம். செவித்திறன் சற்றே குறைவுடையவராயிருப்பினும் மெதுவாகக் கேட்டு விவரம் அறிந்துகொண்டு தனது மடலை அவர் பிரிக்கும்நேரத்தில் சுற்றிலும் பார்வையை ஓடவிட்டேன். அந்த நடுக்கூடத்தில் தரைக்கும் விதானத்துக்குமாய், கம்பீரமாய் நின்றிருந்தது கருப்பு வெள்ளைப்படம்!. செல்லம்மாள் பாரதி! அப்படத்தினருகே சென்று கும்பிட்டு நின்றேன். மதுரம் அம்மாள் மகிழ்ச்சியுடன் “இவர்களை உனக்குத் தெரிகிறதா“ என்று கேட்டார். ஆம் என்று தலையசைத்தேன். “சிலபேர் இந்த போட்டோ நீங்களும் உங்கள் கணவரும் இளமையில் எடுத்துக்கொண்டதா என்று கேட்கிறார்கள்“ என்று சொல்லி வாய்விட்டுச் சிரித்தார்கள் என்னைப் பற்றி ஓரளவு தெரிந்துகொண்டதும் பெரிய புத்தகம் ஒன்றைச் சுட்டிக்காட்டி “எனது கணவர் பூதலிங்கம் செய்துள்ள ஆய்வுகளின் தொகுப்பு“ என்றார் ஓ.... முன்னர் எனது தந்தையார் குறிப்பிட்டிருந்த ஒரு ஐ.ஸி.எஸ் அதிகாரி – ரிசர்வ் வங்கித்தலைவர் பூதலிங்கம் என்று எனக்குள் அறிவுமணி அடிக்கத்தொடங்கியது. அதற்குப்பின் மற்றொரு பழைய வாசனையுடனான தாள்களைக் கொண்டிருந்த ஒரு புத்தகத்தைக் காட்டினார் வாஸவேச்வரம் – மறுபடி அறிவுமணி பலமாக விசிறியடிக்க ஆரம்பித்தது. நான் முன்னரே படித்திருந்த கிருத்திகாவின் மிகச்சிறந்த புதினமல்லவா? ”தெரியுமே“ என்றேன்...! “நான் மதுரம் பூதலிங்கம் மட்டுமில்லை கிருத்திகாவும்தான்” என்று சொல்லி மறுபடியும் சிரித்தார். நான் மகாமகா சின்னவளானேன் பாரதி செல்லம்மாள் மதுரம் பூதலிங்கம் கிருத்திகா எல்லாருக்கும் சேர்த்து கீழே விழுந்து வணங்கினேன். மதுரமாகிய கிருத்திகா அவர் ஆங்கிலத்தில் எழுதியிருந்த *Art of Living*

என்றொரு புத்தகத்தைப் பரிசாகத் தந்தார் நானும் ஒரு படைப்பாளி என அறிந்து மகிழ்வுற்று ஆசி வழங்கினார். சுவரில் ஒரு நடுத்தர அளவு படத்தைக் காட்டி “இவர்கள் எனது மகளும் மருமகனும்” என்று சொல்லி “மீனாவும் - சுவாமிநாதனும்” என்று சுட்டிக்காட்டியதும் வியந்து போனேன். எம்.எஸ்.சுவாமிநாதனின் மாமியாரைபும் பார்த்துப்பேசும் வாய்ப்பல்லவா கிட்டியது. வாழ்க அந்தத் தபால்காரர் என்று எண்ணி மகிழ்ந்தேன்.

எழுத்தாளர் கிருத்திகாவைப் பார்த்துப் பேசினேன் என்றதும் என் அம்மா மதுரம் மகிழ்ந்துபோனதோடு அப்புறம் அவர்களுக்குள்ளே பலகாரப் பரிமாற்ற உறவுகளை ஏற்படுத்திக்கொண்டார்கள். இந்நேரத்தில் அமரர் கிருத்திகா அவர்களையும் அவரது மருமகன் அமரர் எம். எஸ். சுவாமிநாதனையும் ஒரு சேர எண்ணிக்கொள்கிறேன். உங்களுடன் ஒரு பகிர்வு. இதனுள்ளே ஒரு அமர வாசகராக எம் அன்னையும் கூடவே இருக்கிறார்கள்.



அன்புடன்
**இரா.மீனாட்சி**

# தமிழ்ப் பழமொழிகள்

## வா

1. வாக்கிலே கெட்ட கழுதையைப் போக்கிலே விட்டுப் பிடி.
2. வாணியன் கட்டை வைரக்கட்டை; தேயத்தேய துடைப்பக் கட்டை.
3. வாணியனுக்குக் கொடுக்கமாட்டான்; வைத்தி யனுக்கும் கொடுக்கமாட்டான்.
4. வாதத்துக்கு மருந்துண்டு; பிடிவாதத்துக்கு மருந்து இல்லை.
5. வாய்சோந்தவன் சபையிலே கெட்டான்; கைசோந்தவன் படையிலே கெட்டான்
6. வாய்விட்டுச் சிரித்தால் நோய்விட்டுப் போகும்.

சு. சண்முகசுந்தரம் – சாகித்ய அகாதெமி வெளியீடு.

# ஸ்ரீஅரவிந்தர் – 150
# ஆரோவில் தில்லைகணபதி படைத்தளிக்கும் அரவிந்தம்

அச்சந்திப்பு பற்றிய
ஸ்ரீஅன்னையின் சிந்திப்பு
மறுநாள்
அவர் எழுதிய
நாட்குறிப்பு இது
"நூறு மனிதர்கள்
இருளில்
மூழ்கி யிருந்தாலும்
இதோ
இந்த மாமனிதர்
இங்கிருந்து
இருளை ஒளியாக்கி
இறை ஆட்சியை
புவிமீது
நிறுவும் நாள்
ஒன்று வரும்"
பால் ரிச்சர்டு
சிந்தனை வேந்தர்
பிரெஞ்சு அறிஞர்.
"ஆரியா" சிப்பி
தத்துவ முத்துக்களை
வெளிக்கொணர
ஸ்ரீஅரவிந்தருக்கு
உதவிய சிற்பி
அதன் பயன்
ஐயாயிரம் பக்கங்கள்.
ஆறு புத்தகங்கள்
ஆறு ஆண்டுகள்
ஆரியாவில்
ஸ்ரீஅரவிந்தரின்
என்றைக்கும்
தலைசிறந்த
ஆன்மீக ஆக்கங்கள்
அனைத்தும்
இடையூறும்
தடையேதும் இன்றி
வெளியீடு ஆயின.

.. .



(மேலும்மலரும்)

# வாசகர் மடல்

அன்புள்ள அனைவருக்கும், வணக்கம். பல் நடுங்கும் குளிரில், ஒரு பெரிய பலா மரத்தின் கீழே அமர்ந்து, பறவைகளின் சப்தங்களைக் கேட்டுக்கொண்டே இதை எழுதத் துவங்குகிறேன்.

நான் நலம். தாங்கள் அனைவரும் நலமா? இந்த இடமும், மனிதர்களும், மொழியும், உணவும், சூழலும் புதுப்புது அனுபவங்களை தினந்தினம் கொடுத்துக்கொண்டே இருக்கின்றன. சில நேரங்களில் சிரமமாக இருந்தாலும் ஒவ்வொன்றையும் ரசித்து கடக்கவும், அனுபவங்களிலிருந்து கற்றுக் கொள்ளவும் பழகிக் கொள்கிறேன். ஆரோவில்லையும், நமது பள்ளியையும், உங்கள் அனைவரையும், தமிழையும் ரொம்பவேத் தேடுகிறது மனது. இங்கு என் நாட்கள் சுவாரசியமாக நகர்கிறது. உங்களுக்குத் தெரியுமா? நான் தங்கியிருக்கும் அறைக்கு வெளியே இருக்கும் இந்தப் பலா மரத்திற்கு தினமும் ராத்திரி ஒரு யானை வருமாம். இங்கு எனக்கு தினமும் சமைத்துக் கொடுக்கிற தம்பதியினர் நேற்று வந்த யானையை வீடியோ எடுத்து வைத்து இன்று காலை எனக்குக்காட்டி இது யானைக்கு மிகப்பிடித்த மரம் என்று கூறினர். பிரமிப்பாக இருந்தது. நான் தங்கியிருக்கும் இடத்திலிருந்து மருத்துவமனைக்கு நடந்து செல்லும் பாதையைப்பற்றி சொல்லியே ஆக வேண்டும். ஒரு நீண்ட தார் ரோடு. ஒரு பக்கம் பெரிய ஏரி. மற்றொரு பக்கம் அடர்ந்து வளர்ந்த மரங்கள், பளிச்சென்ற வண்ணங்களில் வித்தியாசமான காட்டுப்பூக்கள். வாட்டர் கலரில் பஞ்சு மிட்டாய்க்கு கலர் அடித்துவிட்டு அந்தத் தூரிகையை எடுத்து உதறியதில் தெளித்த வர்ணம் பட்டது போன்ற ஒரு இலையை இன்று பார்த்தேன். புகைப்படம் அனுப்பியிருக்கிறேன் .

நடந்து செல்லும் வழியில் என் வலப்பக்கம் இருக்கும் ஏரிக்கு அருகே ஒரு பெரிய பாறை இருக்கிறது. மாலைப்பணி முடித்து அறைக்குத் திரும்புகையில் அந்தப் பாறையில் அமர்ந்துக்கொண்டு சூரிய அஸ்தமனம் பார்த்துவிட்டுத்தான் நடக்கத் துவங்குவேன். சில நேரங்களில் அங்கு சில பழங்குடியினர் மீன் பிடித்துக் கொண்டிருப்பார்கள். ஒருவர் குத்துக்காலிட்டு அமர்ந்துக்கொண்டு தூண்டில் போட்டு மீன் பிடிக்கப் பிடிக்க, மற்றொருவர் தூண்டிலில் சிக்கும் மீனை எடுத்து ஒரு சிறிய சாக்குப்பைக்குள் போட்டு பத்திரப்படுத்துவார். சில சமயங்களில் கணவனும் மனைவியும், சில நேரங்களில் அக்காவும் தம்பியும், சிலசமயம் தாத்தாவும் பேரனும் என இரண்டு பேராய்த் தான் மீன் பிடிக்க வருகின்றனர்.

சோலிகா என்னும் ஆதிவாசிகள் வசிக்கும் பகுதியில்தான் நான் இருக்கிறேன். அவர்களுடைய வாழ்க்கை முறை, அவர்களுடைய கலாச்சாரம், பண்பாடு போன்றவற்றை கேட்டுத் தெரிந்துக்கொள்ள முயற்சி செய்கிறேன். மொழி தெரியாததுதான் கொஞ்சம் சிரமமாக இருக்கிறது. சில வார்த்தைகளும், வாக்கியங்களும் பேச கொஞ்சம் கொஞ்சமாக கற்றுக் கொண்டிருக்கிறேன்.

மருத்துவமனையில் காலை 9:30 லிருந்து மாலை 4:00 மணி வரையும்தான் வேலை. இங்கு இரத்த சோகையால் பாதிக்கப்பட்ட நிறைய பெண்களும், சிக்கில் செல் நோயால் பாதிக்கப்பட்ட மனிதர்களும்தான் அதிகம் இருக்கின்றனர். சிக்கில் செல் நோய்க்குத் தனி கவனம் கொடுக்கப்பட்டு அதற்கான சிகிச்சைகளும், காப்பு முறைகளும், ஸ்க்ரீனிங் பரிசோதனைகளும் இங்கு மும்முரமாக நடைபெற்றுக் கொண்டிருக்கின்றன.

காட்டிற்குள் வாழும் ஆதிவாசிகளை சந்திக்க ஒரு ஜீப்பில் செல்கிறோம். அந்தப் பகுதிகளுக்குள் மற்ற எவரும் அனுமதிக்கப்படுவதில்லை. மருத்துவக் குழுவாக செல்வதால் எங்களை அனுமதிக்கிறார்கள்.

ஆதிவாசிகளுக்கென இயங்கும் பள்ளிக்கு ஒரு நாள் சென்றிருந்தேன். மொழி தெரியாததால் புன்னகையால் அன்பின்



மொழியை மட்டும் உணர்த்திவிட்டுத் திரும்பினேன்.

நிறைய அனுபவங்கள் அழகாகவும், புதிதாகவும் இருக்கின்றன.

– காயத்ரி சாலை – தன்னார்வ தொண்டர். – மருத்துவர். பிலிகிரி சரணாலயம் கர்நாடகா.

ஆரோவில் பாரதி இதழ் பாதுகாக்கப்பட வேண்டிய இதழ்.ஞானபீடம்./ ஜெயகாந்தனின் பாரதி உரை வீச்சு கல்வெட்டாய் நிற்கிறது. ஜெயகாந்தன் உங்கள் சிரித்த படம். ஆரோவில்லைத் தாய் வீடாக ஜெயகாந்தன் போற்றியது உங்கள் தவம் பலித்ததைக் காட்டுகிறது.

– கவிஞர் பெ. சிதம்பரநாதன். கோவை

## படித்ததில் ஈர்த்தது



அரசஞ் சண்முகனாரும், ஈழத்து அறிஞர் உள்ளிட்ட பல வித்வான்களும் ஆகுபெயர் அன்மொழித்தொகை பற்றி ஆர்ப்பரித்து வாதிட்ட பொழுது, பாரதியார் பின்வருமாறு எழுதினார்.

“நெல் எப்படி விளைகிறது என்பதைக் கற்றுக்கொடுக்காமல் அன்மொழித் தொகை யாவது யாது என்று படிப்புச் சொல்லிக் கொடுப்பதை நினைக்கும்போது கொஞ்சம் சிரிப்புண்டாகிறது. அன்மொழித் தொகை சிலரைக் காப்பாற்றும், ஊர் முழுவதையும் காப்பாற்றாது. அன்மொழித் தொகையைத் தள்ளிவிட வேண்டுமென்று நான் சொல்லவில்லை. ஆனால் அன்மொழித் தொகையைப் பயிர்செய்து நெல்லை மறந்து விடுவது சரியான படிப்பில்லையென்று சொல்லுகிறேன் அவ்வளவுதான் ”.

பேராசிரியர் க. கைலாசபதி

சீனி விசுவநாதன் தொகுப்பு “மகாகவி பாரதி – கட்டுரை மணிமாலை சங்கர் புக்ஸ் – சென்னை– 1981

## சித்தாஞ்சலி

மேல்மருவத்தூர் சித்தர் பங்காரு அடிகளார் சித்தர்களின் உலகடைந்தார். செவ்வாடை பூண்டு ஆண் பெண் அனைவரையும் அம்மா என அழைத்து உலக அன்னையின் சக்தியை வேறுபாடின்றி அனைத்து மக்களும் உணர்ந்து போற்றுமாறு சக்திபீடத்தினை அமைத்த அடிகளார் சித்தருலக நிலையினின்று தொடர்ந்து அருளாசி வழங்குவார். ஓம் சாந்தி.

– அய்யனார்.

## செய்தித்துளிர்

நமது மையத்தில் நடைபெற்ற பரிணாமத் திருவிழாவைக் காண பல ஊர்களிலிருந்தும், பல பள்ளிகளிலிருந்தும் அனைத்து வயது அன்பர்களும் வந்துசென்றனர். பொம்மைக்கொலுவில் படிநிலைகளில் புல்பூண்டு விலங்குகள் முதல் மனிதர் சித்தர், அவதாரங்கள் என மேற்சென்று பெருந்தெய்வங்கள்வரை காட்சியளித்த உள்நாட்டுக் களிமண் பொம்மைகளின் அழகும் நேர்த்தியும் வண்ணங்களும் பார்வையாளர்களை ஈர்த்தன. பக்கத்து அரங்கில் அமைந்திருந்த நூலகத்தில் கோவில் அமைதி தியானமும், கூட்டுவழிபாடும் ஆரத்தியும் சிலருக்கு மனநெகிழ்ச்சி அளித்தது. வெளியரங்க முற்றத்தில் நிகழ்ந்த கலைநிகழ்ச்சிகள் அன்னைக்குச் சமர்ப்பணமாகின.

நமது அழைப்பினை ஏற்று நவராத்திரி கொலு பார்க்க வந்தவர்கள் தங்களது அனுபவங்களை அருமையாகப் பதிவு செய்துள்ளனர். நன்றி. கலந்து கொண்டவர்கள் பற்றிய விவரம்.

– குயிலைக் கல்விக்கூடம், குயிலாப்பாளையம்

* ஊராட்சி ஒன்றியப்பள்ளி, இடையன்சாவடி
* மேனாள் மாணவர்கள், இந்நாள் தையல்வகுப்புப் பயனாளிகள்,

இளைஞர்கள் கல்வி மையம்

* ஊராட்சி ஒன்றிய நடுநிலைப்பள்ளி, பெரியமுதலியார்சாவடி
* ஐக்கியம் பள்ளி, ஆரோவில்
* நட்பினர், கரேஜ் கம்யூனிட்டி, ஆரோவில்
* ஒளி பள்ளி, ஆரோவில்
* ஆய்வு மாணாக்கியர், புதுவைப் பல்கலைக்கழகம்
* தலைவர், ஏக்தா எம்.ஐ.டி.இ கர்நாடகா
* மேனாள் ஆசிரியை குடும்பத்தினர் திருச்சிற்றம்பலம்
* கிண்டர்கார்ட்டன் மழலையர் பள்ளி - ஆரோவில்.
* ஊராட்சி ஒன்றியத் தொடக்கப்பள்ளி, பொம்மையார்பாளையம்
* ஆய்வு மாணவர்கள், யூத் கேம்ப், ஆரோவில்.
* மாணாக்கியர், புது தில்லி
* பிரார்த்தனா கம்யூனிட்டி நண்பர்கள், ஆரோவில்
* அருள்வழி ஆசிரியர்கள், ஆரோவில்
* இணைவு சேவை மையம். கோட்டைக்கரை
* விவேகானந்தம் சேவை மையம், விவேகானந்தபுரம், இடையன்சாவடி
* யோகா வகுப்புப் பயனாளிகள், இளைஞர்கள் கல்வி மையம்
* ஊழியர்கள், ஆரோவில் மின்துறை.
* பயனாளிகள் பாரதி எஜூகேர், இளைஞர்கள் கல்வி மையம்
* அனைத்து ஆரோவில் ஊழியர்கள், கிராம நண்பர்கள்.

பரிணாமத் திருவிழா- கொலு ஒவ்வோர் ஆண்டும் ஒவ்வொரு பொருண்மையில் விளக்கமுறும். இவ்வாண்டு கருவிகள் - ஆயுதங்கள் எனும் பொருள் கையாளப்பட்டது. சாதாரண மக்கள் நமது வாழ்வில் பயன்படுத்தும் கருவிகள் எவ்வாறு தெய்விக நிலைக்கு உயர்ந்து இறையருளால் ஆக்கல், காத்தல், அழித்தல், மறைத்தல் அருளல் எனும் ஐந்தொழில்களுக்கும் உறுதுணையாகின்றன என்பதை வடிவமைத்திருந்த பாங்கினைப் பார்வையாளர்கள் பெரிதும் பாராட்டினர். அத்தகைய வில், அம்பு, வாள், சூலம், வேல், சங்கு, சக்கரம் ஏடு எழுத்தாணி, வீணை, மாலை என்னும் பல கருவிகளை வரைந்தும் அட்டையில் உருவாக்கியும் காட்சிப்படுத்தியிருந்ததையும் அனைவரும் இரசித்தனர். உள்ளூரிலிருந்து உலகம் வரை என்பதையும் தாண்டி பிரபஞ்சம் வரை எனும் பெருநிலைக்குரிய கல்வி நிகழ்வினை நம் மையம் வழங்கியுள்ளது. நமது கலைக்கூடத்தில் உருவான துணி பொம்மைகள் தனியே காட்சிப்படுத்தப்பட்டிருந்தன. குப்பைக்குச் செல்லாத செல்வம் எனப் போற்றப்பட்டது பன்னாட்டு மக்களும் வந்திருந்து பங்கு கொண்டனர். நாளும் மாலை பஜனையும் ஆரத்தியும் பிரசாதமும் ஒருபுறம் மகளிர் அரங்கில் நடந்து கொண்டேயிருந்ததும் சிறப்பு. உறுதுணையாக நின்ற அனைவருக்கும் நன்றி. ஆனந்த், அய்யனார், ஜானகி, பச்சையம்மாள், திலகவதி, சக்குபாய், பெருமாள் குழுவினர்.

## ஸ்ரீஅரவிந்தர் சிந்தனை மணிகள்

நாம் உயர்நிலையை எய்தாத வரை, பிறருடைய விதிகளைக் கடைபிடிப்பதற்குப் பதிலாக நம்மீது நாமே சுமத்திக்கொண்ட விதிகளைக் கடைபிடிப்பதே சுதந்திரம் என்பதன் பொருளாக இருக்கும். ஆத்மனின் ஆதிக்கத்தில், இறைவனில் மட்டுமே நாம் பூரண சுதந்திரத்தை அனுபவிக்க முடியும். .



சிறுவர் இலக்கியம்

# வெற்றிக்கு வித்திட்ட விஜயதசமி

விஜயதசமியன்று காஞ்சி மடத்தில் பத்து வயதுச் சிறுவன் ஒருவன் தரிசனத்திற்காக நின்றிருந்தான். நிறைய பக்தர்கள் தரிசிக்க வருவதால் சிறுவனின் மனதிற்குள், 'மஹாபெரியவர் முக்கிய பிரமுகரோ' என எண்ணத்துடன் அங்குமிங்கும் பார்த்தான். மஹாபெரியவருக்கு அருகில் அவன் வந்ததும், என்ன விஷயம் எனக் கேட்பது போல பார்த்தார் சுவாமிகள். "எனக்கு உங்க கையெழுத்து வேணும்" என ஒரு நோட்டை நீட்டினான். எதிலும் கையெழுத்திடும் வழக்கமில்லை என்றாலும் சிரித்தபடி, "எதற்குக் கையெழுத்துக் கேட்கிறாய்?" என்றார் சுவாமிகள்.

"பிரபலங்களின் கையெழுத்தை சேகரிப்பது என் வழக்கம். உங்களைப் பலரும் தரிசிக்க வருவதால் நீங்களும் முக்கிய பிரமுகர்தானே? அதனால்தான் கேட்கிறேன்" என்றான். பக்தர்களும் சிரிக்க, சுவாமிகளும் சிரித்தார். மடத்தின் நிர்வாகியைக் கூப்பிட்டு, "இவனின் நோட்டில் மடத்து சீல் வைத்து, 'நாராயண நாராயண' என்று எழுதி கையெழுத்திட்டுக் கொடு" என்றார். அவரும் கையெழுத்திட'சிறுவனுக்கு சந்தோஷம். விடைபெறத் தயாரானான். "கொஞ்சம் பொறு" என மஹாபெரியவர் சொல்ல அவன் நின்றான். மடத்து ரிஜிஸ்டரை நிர்வாகியிடம் எடுத்து வரச் சொல்லிய மஹாபெரியவர். "உன்னோட கையெழுத்து எனக்கும் வேணும். இந்த ரிஜிஸ்டரில் கையெழுத்திடு" என சிறுவனிடம் நீட்டினார். ஆர்வமுடன் கையெழுத்திட்டான். அவன் கிளம்பிய பின்னர், "அந்தப் பையன் என்னை முக்கியமானவனாக நினைக்கிறான். அதனால்தான் கையெழுத்துக் கேட்டான். அவனிடம் கையெழுத்துக் கேட்டதற்கு விளக்கமாக, தானும் முக்கியமானவன்தான் என்ற எண்ணம் அவனுக்கும் வர வேண்டும். அப்போது தான் வாழ்வில் பிடிப்பு உண்டாகும். வெற்றிகரமான எதிர்காலத்தை உருவாக்குவான். அதனால்தான் கையெழுத்து வாங்கினேன். முக்கியம் இல்லாதவர் என்று உலகில் யாருமில்லை" என்றார்.

நன்றி – ஆன்மிக மலர் – அக்டோபர் 20, 2023.

## அறிவோம் நம் தமிழ் - XI
## தமிழில் பழந்தமிழ்க் கலைச்சொற்கள்

| | |
|---|---|
| GLORY | புகழ் |
| | கீர்த்தி |
| | பேரொளி |
| | பெருமை |
| | மகிழ்ச்சி |
| | புரை |
| | பகம் |
| | பசுந்து |
| | சீர்மை |
| | சீர் |
| | வெறுக்கை |
| GOAL | இலக்கு |
| | நோக்கம் |
| | குறிக்கோள் |
| | முடிவு எல்லை |
| | குறி |
| | பெறுதி \| வாறு \| நினைவு |

நன்றி: ஆங்கில – தமிழ் வகுப்பிற்குப் பயன்பட்ட அகராதி. International Advanced Deluxe Dictionary.


## தனிச்சுற்றுக்கு மட்டும்

வெளியீடு : ஆசிரியர் குழு
ஆரோவில் செய்திமடல்
இளைஞர்கள் கல்வி மையம்
ஆரோவில் - 605101
விழுப்புரம் மாவட்டம்
தமிழ்நாடு
மின்னஞ்சல் : tamil@auroville.org.in
தொலைபேசி : 0413-2623773
ஆசிரியர் : இரா.மீனாட்சி
வடிவமைப்பு : சொ.அருணன், புதுவை.
அச்சு : சூர்யா பிரிண்ட் சொலூசன்ஸ், சிவகாசி.